[Dr. T. V. Sivanandam] [2nd July 1962

whenever it is not possible to get any help from the local people, Government must open colleges and polytechnics. At least they must go and help the philanthropic people in the local area and encourage them by giving them matching grant to open colleges. When opening colleges and polytechnics Government must be very careful to see if the necessary teachers and equipment are available. Without the equipment and the teachers it will not be possible to run any college even if one is opened. It will be just like primary health centres where there are no doctor and at times no medicines even after several months of their opening.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : May I request the hon. Member to give me a few instances of primary health centres functioning without doctors and medicines?

DR. T. V. SIVANANDAM : There are several such dispensaries; I am not able to give a catalogue. There are health centres where there were no doctors for several months after their opening. In Coimbatore district itself there are several primary health centres which are without medicines even several months after their opening. Such a thing should not occur at least in the educational field. Whether English or Hindi is going to be the medium of instruction or whether Hindi or English is going to be taught in the fourth standard, moral and religious instruction must be given to the students even in the first standard. We call ourselves a secular State. It does not mean that we are Godless and that we are irreligious. Secular State means a State where we honour and respect every faith and religion. Unless the character and morale of our students even in the first standard are strengthened, any sort of development in our country will not stand firm. That can be done only if moral and religious instruction is given even from the first standard itself. Even in textbooks moral and religious instruction must find a place.

திரு. ஆர். வெங்கடாசலம் : தலைவரவர்களே! மதசார்பற்ற சர்க்காரில், மதக்கல்வி கொடுக்கவேண்டுமென்று கனம் அங்கத்தினர் கூறுகிறார். அதைப்பற்றி நம் அமைச்சரவர்கள் விளக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

DR. T. V. SIVANANDAM : If only moral and religious instruction is given, the morale and character of the people will be all right. Then only our country will advance with the development plants and it will be a beacon light for other people.

Regarding hospitals, there are several philanthropic people who come forward with donations. Government must help them and encourage them. They must give them matching grant at an early date. I know when Sri Ramachandran, I.A.S., was the Collector of Coimbatore, we had the Golden Jubilee celebration of our hospital and we were able to collect one lakh of rupees. It is now three years old. Still the matching grant has not been sanctioned. I hope and trust it will be sanctioned soon. Governors and Ministers who have visited the place said that such an effort

4-10 p.m.

2nd July 1962] [Dr. T. V. Sivanandam]

deserved all encouragements and they also stated that necessary money has been earmarked for the purpose. The construction of this of orthopaedic ward has become an urgent necessary because Coimbatore has grown into a big industrial city and accidents occur too often. I am glad to see from the Budget that a sum of Rs. 2 lakhs has been sanctioned for this purpose. I do welcome this, but the people who have given donations are disappointed to find that even after some years no work has been started by the Government.

Another project for which we have collected donations from the people to the extent of a lakh of rupees is the construction of the maternity ward. The Hon. the Chief Minister came there last month and laid the foundation stone of the block. The people have also promised another lakh of rupees. In these cases, the Government save money to the extent donations are forthcoming from the public. If the Government want to encourage people to contribute more and more towards such beneficial projects, they should start the work early. Then only it will be possible for us to get more and more donations from philanthropically minded people. Therefore, I would request the Government to finish projects for which donations are received, as quickly as possible.

Then, Sir, money was sanctioned for the construction of regional laboratory at Coimbatore long ago, but still the laboratory has not come up. I would request the Government to see that a fillip is given to the authorities concerned and see that the laboratory comes up early.

In respect of the construction of the Hospital under the Employees State Insurance Scheme also, there is delay. The Central Government sanctioned a grant of Rs. 28 lakhs two or three years ago. People have gone round and found a site also but I do not see why the hospital has not yet come up. Probably the delay is due to the difference of opinion regarding the suitablity of the site and unsuitability of the water for hospital purposes. If that is the case, I would request the Government to get a better site for the hospital and begin the work as early as possible. If there is any difficulty in getting the site, the present headquarters hospital might be utilised for the scheme or at least a hundred acres in the Central Jail where you have 300 acres of vacant land might be set apart for this hospital. This site can also be utilised for putting up a Medical College for Coimbatore at a later stage.

Sir, I am sorry the Hon. Minister in charge of Health is not now present. Only yesterday the Hon. Minister, in replying to a question put by the hon. Member Dr. Sreenivasan, said that there was no doctor who received less pay than the doctors working in Government departments. The question was whether there were still doctors in the local bodies getting lesser pay than doctors working in Government departments. I know there are still doctors who belong to the category of Sub-Assistant Surgeons in the local bodies who draw much less pay than the Government doctors. There are still rural medical practitioners who draw less pay than

[Dr. T. V. Sivanandam] [2nd July 1962

Government doctors. Probably the Government are not aware of the existence of these people, because they are not giving the pay straight to the doctors. They are paid by the local bodies. I would request the Hon. Minister to see that the doctors serving in the local bodies are paid the same pay as Government doctors.

I think the Hon. Minister once said that the Doctor's pay must be increased. I welcome this statement. They must be paid amply in order not to be tempted by private practice. What happens now is this. They are allowed limited private practice. People who have private practice, by the time they go to the hospital, are dead tired and exhausted and are not able to be of much service in the hospital as we would expect them to be. Therefore, my plea is that doctors should be paid amply and freed from private practice completely. Now doctors are so tempted by private practice that if they are transferred to another station, they present a quarter sheet of paper applying for leave for which they are eligible and then they resign their job. If this kind of thing goes on, there will be a permanent dearth of doctors for our hospitls. The only solution for this is they should be amply paid.

In this connection, I would also request the Government to upgrade the L.I.Ms. and G.C.I.Ms. and pay them amply because, they are also in charge of hospitals and their responsibilities and work are the same as those of the other doctors. I would, therefore, request that Grade II Assistant Surgeons should be abolished and they should be paid the same scale of pay as the medical graduates. I referred when I spoke last to the difficulties of the final year G.C.I.M. students. They do not know for which examination they should appear. The Government should revive the examinations they had before. The final year students should be examined by a competent authority and they should at least be given a D.M.S. diploma in consultation with the University authorities. The diploma should be recognised and they should be included in any of the schedules of the Indian Medical Council.

Thank you, Mr. Chairman, for giving me so much time to speak on the Budget proposals. You are looking at the clock. I will not take any more of the time of the House. Thank you.

* டாக்டர் அ. சிதம்பரநாதன்: தலைவர் அவர்களே, இப்போது மன்றத்தின் முன் வைக்கப்பட்டிருக்கிற வரவு செலவுத் திட்டத்தில், 'கல்வி' தலைப்பில் காணப்படுகின்ற சில நல்ல கூறுகளை நான் மனமார வரவேற்கிறேன். இதுகாறும் 28 ஆயிரம் தொடக்கப் பள்ளிகளை அமைத்திருப்பதும், அவற்றில் 39 லட்சம் மாணவர் களுக்குக் கல்வி பயில்விக்க ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதும் மிகவும் பாராட்டுக்குறிய செய்தி. அதே மாதிரி மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள், 6 வயது முதல் 11 வயதிற் குட்பட்ட குழந்தைகள் எல்லோரையும் நம்முடைய மாநிலத்தில் கட்டாய இலவசக் கல்வி பெறுமாறு அரசாங்கத்தினர் செய்து விடுவார்கள் என்பதும் பாராட்டுக்குரிய செய்தியேயாகும். ஆனால் இதுதான் நம்முடைய மாநிலத்தின் இலக்கு போல்

2nd July 1962] [டாக்டர் அ. சிதம்பரநாதன்]

இங்கே அமைச்சரவர்கள் குறிப்பிட்டிருப்பது அவ்வளவு பொருத்தமுடையதா என்பது சிந்திக்கத் தக்கது. உண்மையிலேயே மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள் 6 வயதிற்கு மேல், 14 வயதிற்குட்பட்ட எல்லாக் குழந்தைகளேயும் கட்டாயக் கல்வி பெறுமாறு செய்வதுதான் நம்முடைய மாநிலத்தின் முன்னைய இலக்கு. பின்ருல் மாற்றியமைக்கப்பட்ட இலக்கான 6 வயது முதல் 11 வயதிற்கட்பட்ட குழந்தைகளுக்குக் கட்டாயக் கல்வி கொடுத்து விடுவோம் என்பதில் ஓரளவிற்கு திருப்தியடையலாம். ஆனுலும், 14 வயது வரையிலும் முழுதும் கொடுக்க முடியவில்லே என்பதில் எனக்குச் சிறிது அதிருப்தியிருக்கிறது.

பொதுவாக, இந்த ஆண்டில் 192 உயர்நிலேப் பள்ளிகள் திறக்கப்பட இருப்பதாக அறிக்கை கூறுகிறது. டாக்டர் சிவானந்தம் 'இந்த மாதிரியான உயர் நிலேப்பள்ளிகள் எல்லாம் சில குறைகளோடு திறக்கப்பட்டிருக்கின்றன' என்று வருத்தம் தெரிவித்தார். நாளடைவில் இந்தப் பள்ளிக்கூடங்கள், அவை பெற வேண்டிய வசதிகளேப் பெறும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில்தான் அரசாங்கம் இசைவு தந்திருக்கிறது என்று கருதுகிறேன். ஆனதிஞல் திறக்கப்பட்ட 192 பள்ளிகளேயும், அதற்கு மேற்பட்ட பள்ளிகள் சிலவற்றையும்கூட நான் வரவேற்கவே செய்கிறேன். ஏதோ விளேயாடுவதற்கு இடமில்லே, வேறு சில வசதிகள் இல்லே என்ற காரணத்திற்காக, திறக்கப்பட வேண்டிய பள்ளிகளேத் திறக்க அனுமதிக்காமல் இருப்பதைவிட, திறக்க அனுமதி தந்திருப்பதற்காக நான் உண்மையிலேயே அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். ஆனுல் அதே நேரத்தில், என்னென்ன கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு அந்தப் பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டிருக்க வேண்டுமோ, அவற்றை அடுத்த இரண்டு ஆண்டுகள் முடிவதற்குள்ளாக அந்தப் பள்ளிகளெல்லாம் எய்துமாறு செய்ய வேண்டிய பொறுப்பு அரசாங்கத்திற்கு இருக்கிறது என்பதை அது உணரும் என்பதோடு, அதை நினேவூட்டவும் விரும்புகிறேன்.

அது நிற்க, மூன்ருவது ஐந்தாண்டுத்திட்ட காலத்தில் நம்முடைய மாநிலத்தில் நாம் பெருமையாக இரண்டு செய்திகளேப் பற்றிச் சொல்லிக்கொண்டோம். ஒன்று, இந்த மாநித்தில் எல்லாக் குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி, காசில்லாத கல்வி, 1 முதல் 10-வது வகுப்பு வரையில் கொடுத்து விடுவோம் என்பது. இன்னென்று, இந்த மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்குள்ளாக 1 கோடியே 60 லட்சம் ரூபாய் செலவில் 200 உயர் நிலேப் பள்ளிகளே, மேல் உயர் நிலேப்பள்ளிகளாக மாற்றி விடுவோம் என்று பெருமையடித்துக் கொண்டோம். இந்த இரண்டும் நம்முடைய மாநிலத்தில் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தினுடைய பெருமைக்கும், சிறப்பிற்கும் உரிய செய்திகள் என்று சென்ற ஆண்டு வரையில் சொல்லப்பட்டு வந்தன. ஆனல் இந்த ஆண்டிலோ, இந்தப் புதிய, திறக்கப்பட வேண்டிய மேல் உயர்நிலேப் பள்ளிகள் (Higher Secondary Schools) என் திறக்கப்படாமல், திடீரென கை நெகிழவிட்டுவிடப்பட்டது என்று புலப்படவில்லே.

4-20 p.m.

[டாக்டர் அ. சிதம்பரநாதன்] [2nd July 1962

இவ்வாண்டு வரவு செலவுத் திட்டத்தில் ஏறத்தாழ 77 லட்ச ரூபாய் உயர்நிலைக் கல்விக்காக (Secondary Education) ஒதுக்கியிருக்கிறோம். இந்தத் தொகையில் ரூபாய் 1,500 தான் ஆசிரியர்களுக்குப் பயிற்சி தருவதற்காக, அதாவது மேல் உயர் நிலைப் பள்ளிகளில் பயில்விக்கத் தகுதி பெறுவதற்கு பயிற்சி பெற, ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது மிக மிகக் குறைந்த தொகை என்பது எடுத்துரைக்கத் தக்கதொன்றாகும். சென்ற ஆண்டில் ரூபாய் 42 ஆயிரம் இதற்காக ஒதுக்கி வைத்திருந்தோம். பல்கலைக் கழகத்தில் அதற்குரிய பட்டம் (Diploma) வாங்குவதற்கான பயிற்சிக்கு அவர்களை அனுப்ப, அந்த வகையில் நாம் ஏற்பாடு செய்திருந்தோம். ஆனால் திடீரென இப்போது அவர்களுக்குக் கொடுக்கப்படவேண்டிய பயிற்சி கொடுக்கப்படவில்லை என்பதும், மேல் உயர்நிலைப் பள்ளிகள் திறக்கப்பட வேண்டியவை திறக்கப்படவில்லை என்பதும், சுட்டிக்காட்டப்பட வேண்டிய நிலையில் இருக்கின்றன.

(Deputy Chairman in the Chair.)

இதைப் பற்றிச் சொல்லுகிறபோது, துணைத் தலைவரவர்கள் அறிவார்கள். அதை நான் நினைவூட்ட விரும்புகிறேன். நம்முடைய மாநிலத்தில் பொதுவாகப் பட்டப் படிப்பு முடிவதற்குள்ளாக 14 ஆண்டு கல்வி இருப்பதா, அல்லது 15 ஆண்டு கல்வி இருப்பதா என்பது வாதத்திற்குரிய செய்தியாக, ஐந்து, ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் வரையில் இருந்தது. பதினைந்து ஆண்டுகள் என்று இருந்தது ஆராயப்பட்டு, ஐந்து, ஆறு ஆண்டுகளுக்கு முன்னால் நம்முடைய மாநிலத்தைப் பொறுத்த வரையில் ஒரு முடிவுசெய்யப்பட்டு விட்டது. ஒருவர் பட்டம் பெறுவதற்கு முன்னால், 14 ஆண்டு படிப்பு பெறுவதா அல்லது 15 ஆண்டு படிப்பு பெறுவதா என்ற செய்தி வாதத்துக்குரியதாக இருந்த காலம் உண்டு. அது 1954, 1955-ஓடு முடிந்தது. 1955-56-ல் நம்முடைய இரண்டு சட்ட சபைகளும் சேர்ந்து கூட்டுக்குழு ஒன்றைக் கூட்டி, நாம் 14 ஆண்டு படிப்பாக அதனை அமைத்துக்கொள்ள வேண்டுமென்ற முடிவுக்கு வந்துவிட்டன. இதற்குக் காரணம் வரலாற்றுக் கண் கொண்டு பார்த்தால் விளங்கும்.

உயர்நிலைக் கல்விக் குழு (Secondary Education Commission) என்பது இந்திய அரசாங்க அமைப்பு. அதன் தலைவராக டாக்டர் லட்சுமணசாமி முதலியார் இருந்து, அந்தக் குழு 1952-53-ல் சிபார்சு செய்த முடிவுகள் நமக்குத் தெரியும். அதன்படி தொடக்க நிலைக் கல்வியானது 4 அல்லது 5 ஆண்டுகள் இருக்கலாம் என்பதாகும். நான்கு அல்லது ஐந்து ஆண்டுகள் இருக்கலாம் என்று கூறப்பட்டிருப்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். அந்தக் குழு யாது காரணத்தினாலோ நான்குதான் என்றோ, ஐந்துதான் என்றோ திண்ணமாக முடிவு செய்ய வேண்டியதை முடிவு செய்யாமல், அந்தந்த மாநிலத்தின் பொறுப்புக்கு விட்டுக்கொடுத்து விட்டது என்பது நாம் சிந்தையில் வைக்கவேண்டிய செய்தியாகும். அப்படி

**2nd July 1962]** *[டாக்டர் அ. சிதம்பரநாதன்]*

நான்கு அல்லது ஐந்து ஆண்டு தொடக்க நிலைக் கல்வி, பிற்பாடு மூன்று ஆண்டுகள் இடைநிலைக் கல்வி (Middle School Education) என்று வரையறுக்கப்பட்டது. ஆக ஏழு ஆண்டுகளுக்குப் பிற்பாடு உயர்நிலைக்கல்வி என்பது, அதற்கு முன்னால் நம்முடைய மாநிலத்தில் மூன்று ஆண்டுகளாக இருந்தது. மேல் உயர்நிலைக் கல்வி (Higher Secondary Education) என்று மாற்றப்பட்டு நான்கு ஆண்டுக் கல்வியாக இருக்கவேண்டுமென்பது அந்தக் குழூஉவின் சிபார்சினால் கிடைப்பது. கமிஷன் என்பதைக் 'குழூஉ' என்றும், கமிட்டி என்பதைக் 'குழு' என்றும் நான் குறிப்பிட விரும்புகிறேன். 'University Commission', 'Secondary Education Committee' என்பதில் 'Commission'- -க்கும் 'Committee'- -க்கும் ஆங்கிலத்தில் பேதம் இருக்கிறது. கமிஷன் என்பதை அளபெடை கொடுத்துக் குறிப்பிட விரும்புகிறேன். அந்த Secondary Education Commission செய்த சிபார்சுகளை அரசாங்கம் கவனிக்க முற்பட்டது. நம்முடைய அரசாங்கம் இந்தக் குழூஉவின் சிபார்சுகளை ஆராய்ந்து நிறைவேற்ற ஒரு தனிக் குழு (Committee) அமைத்தது. அந்தக் கமிட்டி 'Secondary Education Reform Committee' என்று பெயர் பெற்றது. அந்தக் குழுவிற்கும் டாக்டர் ஏ. லக்ஷ்மண சாமி முதலியார் அவர்களே தலைவராக அரசாங்கத்தால் நியமிக்கப்பட்டார். அந்தக் குழுவில் கல்வித் துறை இயக்குனர் திரு. சுந்தரவடிவேலு, சைதாப்பேட்டை ஆசிரியர் பயிற்சிப் பள்ளிக் கல்லூரி முதல்வர், தென்னிந்திய ஆசிரியர் சங்கத் தலைவர் திரு. எஸ். நடராஜன் அல்லது திரு. டி. பி. சீனுவாசவரதன், ஆக நான்கு பேர்கள் இருந்து, 'Secondary Education Committee' செய்த சிபார்சுகளை எவ்வாறு நிறைவேற்றுவது என்று ஆராய்ந்து அவர்கள் சொல்லிய முடிவுகளை அரசாங்கம் பரிசீலித்தது. அப்படிப் பரிசீலனை செய்யப்பட்ட செய்திகள் White Paper on Education, Memorandum No. II என்பதில் காணப்படுகின்றன. அந்த வெள்ளைச் செய்தித்தாள் அறிக்கை நம்முடைய சட்டசபையில் 1956 மார்ச்சு மாதம் திரு. சுப்பிரமணியம் கையெழுத்தோடு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் குறிப்பிட்டிருக்கிறது:

'The proposals formulated by Government proved acceptable to the Chairman of the Committee. The Director of Public Instruction also agreed that his objections were met. Later, these proposals were explained to the Central Advisory Board of Education, New Delhi, at its last meeting held in January 1956. It was ascertained that they were in line with ideas in other States and, if decided upon, they will have the approval of the Government of India.'

எனவே அந்தக் குழு செய்த சிபார்சுகளை அரசாங்கம் ஆராய்ந்து, கல்வித் துறை இயக்குனருக்கும், துணை வேந்தருக்கும் இருந்த அபிப்பிராய பேதங்களை நிரவி ஒரு முடிவுக்கு வந்தது எனவும், மேல் சட்டசபையும், கீழ் சட்டசபையும் சேர்ந்து ஒரு குழுவினைப் பிறகு அமைத்தன என்பதும் அந்தக் குழுவின் சிபார்சுகள் அனைத்தும் அரசாங்கத்துக்கு இணக்கம் என்பதும் தெரிய

வருகின்றன. அரசாங்க இசைவு பெற்ற பிற்பாடு எவ்வாறு திரு. சுப்சமணியம் அதைத் தெரிவித்திருக்கிருர் என்பதையும் நான் மேற்கொண்டு எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

4-30 p.m. அதாவது நம் மாநிலத்தில் 1 முதல் 8 வகுப்பு வரை என இருந்தவற்றை 1 முதல் 7 வகுப்புகள் என்று மாற்றிஞர்கள்—Standards I to VII என்று மாற்றியதுடன் மட்டும் இந்த சீரமைப்பு நிற்கவில்லே. உண்மையில் ஒவ்வொரு ஆண்டுக்கும் கற்பிக்கப்பட்ட பாடங்கள் வலுவாக்கப்பட்டன. எனவே 8 ஆண்டுகளில் கிடைக்க வேண்டிய அந்தத் தொடக்க நிலேக்கல்வி என்று கூறப்படுவதை 7 ஆண்டுகளுக்குள் பெறுமாறு செய்வதற்கு வேண்டிய அளவு வன்மையுடையதாகப் பாடத் திட்டங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன என்பதை நான் அறிவேன்; இன்னும் பல அறிஞர்களும் அறிவார்கள். எனவே ஏதோ எட்டு ஆண்டுக் கல்வியை ஏழு ஆண்டுகளாக்கி விட்டார்கள் என்பதால் தரம் அல்லது திறம் குறைந்துவிட்டது என்பது இல்லவே இல்லே. தரத்தையும், திறத்தையும் குறைக்காமல் பாதுகாத்துக் கொண்டு எட்டு ஆண்டுகளில் பெற்று வந்ததை ஏழு ஆண்டுகளில் பெறுமாறு செய்திருக்கின்ரேும். எவ்வாறு என்ருல் தொடக்க நிலேப் பள்ளிக்கூடங்களில் 200 வேலே நாட்களாக இருந்தவற்றை 220 நாட்களாக மாற்றி, அதில் கணக்குப் போட்டு ஏழு ஆண்டுகளுக்கு என்ன ஆகுமோ எனப் பார்த்து முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அதை யெல்லாம் மனதில் கொண்டு இந்த வெள்ளே அறிக்கை பேசுகிறது என்று நினேக்கிறேன்.

'Is this suggestion feasible? The Director of Public Instruction agrees that it is. There are no insuperable technical difficulties. The conclusion was thus reached that Secondary Education should be reorganised as proposed by the Commission and endorsed by the Committee, in New Standards VIII to XI; and as corollary thereto, Elementary Education should be reorganised as an integrated course of seven years instead of eight, in New Standards I to VII.'

இம்மாதிரி இந்த வெள்ளே அறிக்கை கூறுகிறது. இந்த வெள்ளே அறிக்கையை நம்முடைய அரசாங்கம் இரண்டு சட்ட சபைகள் முன்னுலேயும் 1956-ல் விவாதத்துக்கு வைத்தது. அது இந்த மன்றத்திலும் சட்ட சபையிலும் ஆராயப்பட்டிருக்கின்றது. அப்போது கல்வி அமைச்சராக இருந்த திரு. சி. சுப்ரமணியம் கூறிய ஒன்றை எடுத்துக் காட்ட விரும்புகிறேன்.

'After considering the entire aspect of the matter, after consulting the Education Department, after consulting the Vice-Chancellor, and after consulting the other expert also, my advice is, 'Let us have a higher standard in secondary schools and for that purpose four-year schooling is necessary in that atmosphere.'

அப்படியானல் உயர்நிலேப் பள்ளிகளில் மூன்று ஆண்டு படிப்புக்குப் பின், மேல் உயர் நிலே பள்ளிப் படிப்பு நான்கு ஆண்டுகளாக்கப் பட வேண்டும் என்பது இவ்வாறு கூறப்பட்டது. அன்று அசெம்பிளியிலும், கவுன்சிலிலும் அறிஞர்கள் சிலரைக் கொண்டு

2nd July 1962] [டாக்டர் அ. சிதம்பரநாதன்]

இரண்டு திட்டத்தையும் ஆராயுமாறு இந்த அசெம்பிளியும் கவுன்சிலும் பணித்தன. அவர்கள் யாவராக இருந்தார்கள் என்று நினைப்பூட்ட விரும்புகிறேன். திரு. டாக்டர் ஏ. லட்சுமணசுவாமி முதலியார், திருமதி எஸ். மஞ்சு பாஷிணி, திரு. வி. கே. ராமசாமி முதலியார், திரு. பி. கே. ராஜா சிதம்பரம், திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளை, திரு. பி. ராமமூர்த்தி, திரு. டி. புருசோத்தம், திரு. என். ராமகிருஷ்ண அய்யர், திரு. வி. ஆர். ரங்கநாதன், திரு. எஸ். சுவயம்பிரகாசம், திரு. கோபால மேனன்—முன் இருந்தார்—அவர் மாநிலம் பிரிந்த பிறகு இந்தக் கூட்டங்களுக்கு வரவில்லை. இந்தக் கமிட்டி கொடுத்த அறிக்கையிலும் "நாங்கள் முழுமனதாக இந்தப் பரிந்துரைகளைச் செய்திருக்கிறோம்" என்று அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். "Our recommendations are unanimous and none of us has any separate minute to add." டிசம்பர் 1956, 10-ம் தேதி அவர்கள் அளித்த அறிக்கை கூறுவது என்னவென்றால் தொடக்க நிலைக் கல்வி முன்னால் எட்டு ஆண்டுகளாக இருந்தது, ஏழு ஆண்டுகளாக உருவாக்கப்பட்டு, திறமையுடையதாகச் செய்யப்பட்டுவிடும், செய்யப்படவேண்டும்; அதனைத் தொடர்ந்து IV Form என்று முன்னாலே இருந்து—இப்போது VIII Standard ; VI Form என்று முன்னாலே இருந்தது X Standard ஆகி 11-வது வகுப்பும் அந்தப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்பட வேண்டும் என்பது சிபாரிசு. அது மாத்திரமன்று. இந்த மேல் உயர் நிலைப் பள்ளிகள் என்று வருகின்றனவே இவை அடுத்த ஐந்து ஆண்டுகளுக்குள்ளாக மூன்றும் திட்டம் முடிவதற்குள், நம் மாநிலத்தில் 100-க்கு 50 விழுக்காடு இணைத்து நிறைவேற்றப் படவேண்டும் என்பது சிபாரிசு—முழுமனதான சிபாரிசு. என்ன செய்திருக்கிறோம்? ஒரு மேல் உயர் நிலைப் பள்ளிக்கூடம் இதுவரை ஏற்படவில்லை. நாம் இருப்பது மூன்றும் திட்டத்தில் இரண்டாவது ஆண்டு. இந்த இரண்டாவது ஆண்டில் ஏதாவது ஒரு மேல் உயர்நிலைப் பள்ளி ஆக்குவதற்குத் திட்டம் கண்டிருக்கிறோமா என்பது என்னுடைய கேள்வி. பல்கலைக் கழக துணைவேந்தரும் கல்வியியக்குனரும் பிற பேரறிஞர்களும் உரையாடி முடிவு கண்டார்கள். Central Advisory Board of Education ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். அதே மாதிரி மற்ற மாநிலங்களிலும் செய்வோம் என்று கூறியிருக்கிறார்கள். பிற மாநிலங்களில் இந்தியா தேசத்தில் மொத்தத்தில் இரண்டாம் திட்டம் முடிவதற்குள்ளாக 3,100-க்கு மேற்பட்ட மேல் உயர்நிலைப் பள்ளிகள் உண்டாக்கப்பட்டிருக்கின்றன. நாம் இதுகாறும் கைகட்டி இருந்திருக்கிறோம். மேல் உயர்நிலைப் பள்ளி ஒன்றுகூட நிறுவ முற்படவில்லை. ஆனால் திட்டம் செய்திருந்தோம். மூன்றும் திட்டம் முடிவதற்குள் 200 மேல் உயர்நிலைப் பள்ளிகள் நிறுவ, திட்டம் வரையறை செய்து அதற்காக ஒரு கோடி 60 லட்சம் ரூபாய் இந்திய கவர்ன்மெண்டிலும் பெறுவோம் என்று நம் திட்ட வரைவு சொல்லுகிறது. பிற மாநிலங்களிலுள்ள மக்களெல்லாம் மேல் உயர்நிலைப் பள்ளிப் படிப்பால் பயன் பெற்று விட்டார்கள். இந்திய அரசாங்கமும் மேல் உயர்நிலைப் பள்ளி நிறுவுவதற்காக இரு பெரிய மானியங்கள் வழங்கிற்று. அந்த இரண்டு வித மானி

[டாக்டர் அ. சிதம்பரநாதன்] [2nd July 1962

யங்களையும் நாம் மேல் உயர்நிலைப் பள்ளிக்கூடம் அமைக்காததால் இழந்து விட்டோம். இப்படியே தூங்கிக் கொண்டிருந்தால், இந்த மூன்றும் திட்டத்தில்கூட நாம் பெற வேண்டிய மானியத்தைப் பெறுவோமா என்பது ஐயத்திற்கு இடமுள்ள செய்தியாக இருக்கிறது. நான் ஒன்று குறிப்பிட விரும்புகிறேன். இந்த Legislature Committee—White paper on Education என்று இருக்கிறதே இது சிபாரிசு மாத்திரமா என்பது கேள்வி. இல்லவே இல்லை. இதை நான் சொல்லவில்லை. இவற்றைப் பற்றிப் பேசிய கல்வி-நிதி அமைச்சராக இருந்த திரு. சி. சுப்பிரமணியம் சொல்லி இருக்கிறார். இந்தக் கமிட்டியை நிறுவியபோது 1956-ல் அவர் சொல்லியதை நினைப்பூட்ட விரும்புகிறேன்.

"It is not the intention of Government that this Committee should submit another report and that report should be scrutinised. The intention is that we will all sit together and take decisions for which I will take full responsibility. Therefore, I would request Hon. Members to view that from that point of view and assist me as far as possible to come to correct decisions."

"இந்தக் கமிட்டியுடன் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களுடன், நானும் உட்கார்ந்து கொண்டு, உடனுக்குடன் முடிவுகள் எடுத்துக் கொள்வேன்" என்று வாக்கு தந்திருக்கிறார் இதே மேடையில், இதே சபையில் "We will all sit together and take decisions for which I will take full responsibility." என்று சொல்லியிருக்கிறார். Legislature Committee என்று கூறப்படும் இந்தச் சட்ட சபைகள் குழு செய்த சிபாரிசுகள் அரசாங்கத்தால் ஒப்புக் கொள்ளப் பட்டு, நிறைவேற்றிவைக்கப்பட்ட வேண்டும் என்பது தெரிய வரும் Legislature Committee on Education என்பது ஒன்று இப்போது இருந்து கொண்டிருக்கிறதல்லவா? அது இன்னும் கூடவில்லை. இரண்டு சட்ட சபைகளின் எல்லாக் கட்சித் தலைவர்களுக்கும் அதில் இடம் உண்டு; கல்வி நிபுணர்களையும் அதிலே சேர்த்திருக்கிறது தலைவருக்கும் தெரியும். இச் சட்ட மன்றத்தில் 1956-ல் இந்தத் திட்டத்தைப் பற்றி விவாதிக்கத் தலைப்பட்ட போது Sir மகம்மது உஸ்மான் அவர்களால், இது போன்ற ஆலோசனை கமிட்டி நிறுவ வேண்டும் என்றும், இவ்வாறு பொது மக்கள் என்ன கருதுகிறார்கள் என அறிந்து கொள்ள வேண்டுமென்றும் தெரிவிக்கப்பட, அதற்கு ஏற்ப கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறது.

ஏதாவது புது விதத் திட்டம் செயற்பட வைப்பதாக இருந்தால், இந்தக் கமிட்டியைக் கேட்பது வழக்கம். ஏதாவது திட்டத்தை விட்டுவிடுவதாக இருந்தாலும், அதே மாதிரி கேட்கும் வழக்கமும் உண்டு. ஆனால் ஏன் இந்த புது 11-வது வகுப்பு 1962-63-ல் திறக்க வேண்டியதைத் திறக்காமல் கை நெகிழவிட்ட போது இந்தக் குழுவைக் கேட்கவில்லை என்பது என் கேள்வி. இக் குழுவில் எல்லாக் கட்சித் தலைவர்களும் சில கல்வி அறிஞர்களும் இருக்கிறார்கள். அவர்களுடன் ஒரு வார்த்தை கலந்து கொண்டு, "புது 11-வது வகுப்பு 1961-62-ல் நிறுவ முன் வரப்போவதில்லை

என்று கருதுகிறோம். உங்கள் கருத்து என்ன?" என்று கேட்டிருக்கக்கூடாதா? அரசாங்கம் முடிவு எடுத்திருப்பதாயிருந்தாலும் ஆலோசனை கூறுவதற்கு அங்கத்தினர்களுக்கு உரிமை இருக்கிறது. அந்த உரிமை பெற ஏன் வாய்ப்பில்லாமல் போய் விட்டது? அதேமாதிரி திடீரென்று மாணவர்கள் எல்லாம் 1962-ல் மார்ச் மாதம் முதல் புதிய பத்தாவது வகுப்பு தேறி விட்டுப் புதிய பதினோராவது வகுப்5க்குப் போகும்போது எந்தப் பள்ளிக்குப்போவது என்று கேட்டுக்கொண்டிருக்கும் போது, இல்லை, நீங்கள் எல்லாம் பள்ளியைவிட்டுவிட்டதும் கல்லூரியில் புகுமுக வகுப்பில்தான் இடம். அங்குப்போய் முட்டவேண்டும். இடம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அங்கேதான் போகவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். 4-40 p.m.

**DEPUTY CHAIRMAN**: அந்தக் கமிட்டி இப்போது இருக்கிறதா? அமைக்கப்பட்டு விட்டதா?

**டாக்டர் அ. சிதம்பரநாதன்**: That is yet to be reconstituted. நான் சொல்வது டிசம்பர் மாதத்தில் திரு. சுப்ரமணியம் அவர்கள் எங்களைக் கலக்காமல் ஒரு அறிக்கையை விட்டுப் போய்விட்டார்.

"This question of introduction of the 11th Standard is deferred since the matter requires re-thinking"

என்பதாகச் சொல்லி அவர் அறிக்கை விட்டார். இப்போதுள்ள புதிய மந்திரி அவர்கள்தான் அதைச் செய்தார்கள் என்று நான் சொல்லவில்லை.

**திரு. ஓ. பி. ராமசாமி செட்டியார்**: ரெஸ்பான்ஸிபிலிட்டியை நானே எடுத்துக்கொள்கிறேன் என்று சொல்லியிருக்கிறார்.

**DR. A. CHIDAMBARANATHAN**: There it is stated, "I take full responsibility for implementing the decisions"; I believe it is not for withholding them.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: He took the responsibility for not implementing them (laughter).

**டாக்டர் அ. சிதம்பரநாதன்**: அதனால் ஐந்தாண்டுக்கு ஒரு முறை திரும்பத் திரும்ப நாம் முடிவுசெய்த செய்தியைச் செயல் படுத்தாமல் செயல் படுத்தவேண்டிய பொறுப்புள்ளவர்கள் செய்யாமல் விட்டுவிட்டது எவ்வளவு வருந்தத் தக்க செய்தி! பள்ளிக் குழந்தைகள் பற்றி எப்படிக் கேட்கப்படுவார்கள்? 1962-ல் பாஸ் செய்த பிள்ளையா 1960-ல் பாஸ் செய்த பிள்ளையா என்று அவர்களிடையே ஜாதி உருவாகிறது. ஜாதி வேண்டாமென்று சொல்கிற நேரத்தில் அடிக்கடி பல்வேறு ஜாதிகள் செய்வதற்கு எதற்கு அரசாங்கம் இடம் தரவேண்டும்? அரசாங்கம் இன்னும் முடிவுக்கு வரவில்லை. ஜூன் எட்டு, ஒன்பது தேதியுள்ள செய்தித்தாள்களில் வந்தது உண்மையானால், இப்போதுள்ள கல்வி அமைச்சர்

அவர்கள் திரும்பவும் சிந்தித்து செயலாற்றுவார்கள் என்பது தெரிகிறது. இருந்தாலும்கூட நாம் செயல்படுத்திவிட்டு அதற்குப் பிறகு செய்தது சரியா இல்லையா என்று பார்த்திருக்கவேண்டும். 1962-63-ன் படிப்பு பதினோராவது வகுப்பா, பத்தாவது வகுப்பா என்பதை ஒரு ஆண்டுக்கு முன்னராவது அறிவித்திருக்க வேண்டும். கல்லூரிக்குச் செல்லும்போது கல்லூரிப் புகுமுக வகுப்புக்குச் செல்வதா அல்லது மேல் உயர்நிலைப் பள்ளிக்குச் செல்வதா என்று மாணவர்களும் பெற்றோர்களும் தெரிந்து கொள்ள முடியாமல் திகைக்கும் நிலையில் வைத்திருப்பது கூடாது. பதினான்கு ஆண்டா, பதினைந்து ஆண்டா பட்டப்படிப்புக்கு முன் பெற வேண்டுமென்பதை எல்லா மாநிலங்களிடையிலும் முழுமனதான கருத்து இன்று இல்லை. அமெரிக்காவிலுள்ள பிள்ளைகள் 16 ஆண்டு படிக்கிறார்கள்; அத்தனை ஆண்டுகள் இங்கு வேண்டும் என்றால் அங்குள்ள சீதோஷ்ண நிலை, வரலாற்று நிலை வேறுபாடுடையன என்பதைக் கருத வேண்டும். இங்கிலாந்தில் பிற்பகல் முழுவதிலும் மாணவர்கள் விளையாடுகிறார்கள். அந்த நேரத்தில் அவர்களை அறைகளில் காணமுடியாது. The whole of the afternoons they are free to go to the play-fields. எல்லோரும் ஓடி விடுகிறார்கள். அரை நாள்தான் படிப்பு. பதினாறு ஆண்டுகள் அமெரிக்காவில் படிக்கிறார்கள். ருஷ்யாவில் பதினாறு ஆண்டுகள் பட்டம்பெறப் படிக்கிறார்கள். ருஷ்யாவில் பதினாறு ஆண்டுகள் அதனால் ஏன் இந்தியா தேசத்தில் பதினாறு ஆண்டுகள் படிக்கக்கூடாது, இல்லாவிட்டால் பதினைந்து ஆண்டாவது படிக்கக்கூடாதா என்று புதிதாக முளைத்திருக்கிற கேள்வி வருந்தத் தக்கக் கேள்வி. நம்முடைய நாடு வெப்ப மண்டல நாடு (tropical zone). டாக்டர் சிவானந்தம் அவர்கள் இதை ஒப்புக்கொள்வார்கள். வெப்ப மண்டலத்தில் மக்கள் உடல் வளர்ச்சி அதிகம் பெறுவது போல மன வளர்ச்சியும் அதிகம் பெறுகிறார்கள், என்று உள நூலோர் சொல்கிறார்கள். உடல் வளர்ச்சியும் மனவளர்ச்சியும் அதிகமாக இருக்கும்போது ஏன் இங்கு காலத்தை அதிகப்படுத்த வேண்டும்? "Marriage Age" திருமணத்திற்கான வயது முதலியவற்றை மேல்நாடுகளிற் போல் நாம் கடைப்பிடிக்கத் தயாராக இருக்கிறோமா? நம்முடைய சூழ்நிலை வேறு, அவர்களுடைய சூழ்நிலை வேறு அமெரிக்கா போல, இங்கிலாந்து போல, ருஷ்யா போல நாமும் அவ்வாறு மாறவேண்டுமென்று நினைப்பது எவ்வளவு பொருந்தும் என்று சிந்திக்க வேண்டிய பொறுப்பு நம் எல்லோருக்கும், கல்வி அமைச்சர் அவர்களுக்கும் முதல் அமைச்சர் அவர்களுக்கும் இருக்கிறது என்று நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். தேசத்துக்குத் தக்க ஆசாரம் என்பார்கள். நம்முடைய தேசத்திற்கேற்ற படிப்பு ஏன் செய்யக் கூடாது? படிப்பு பதினான்கு ஆண்டுகளா, பதினாறு ஆண்டுகளா என்று முடிவு செய்ய வேண்டிய காலம் கடந்துவிட்டது. 1955-56-ல் முடிவு எடுத்ததுமே, Legislature Committee on Education கொடுத்த அறிக்கையிலேயே முடிந்துவிட்டது. மீண்டும் அதுபற்றிக் கிளறிவிடப்பட்டது ஏன் என்று எனக்குப் புலப்படவில்லை. தேன்கூட்டைச் சிதைப்பதைப்போல ஏன் இதனை

2nd July 1962] [டாக்டர் அ. சிதம்பரநாதன்]

இப்பொழுது சிதைக்க வேண்டும்? இதையெல்லாம் அரசாங்கம் நன்கு சிந்தித்துச் செயல்படுத்தவேண்டுமென்று கூறி முடித்துக் கொள்கிறேன்.

* **திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார்** : உப தலைவர் அவர்களே, இப்போது 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையின்மீது என்னுடைய சில ஆட்சேபணைகளையும் சில அபிப்ராயங்களையும் சொல்ல முன் வந்திருக்கிறேன். பொதுவாக மழை பெய்வது நின்றுவிட்டாலும்கூட இந்த மாதத்தில் வரிபோடுவது நிற்கவில்லை, பத்து வருஷங்களாக. அதாவது கடன் வாங்குவது, வரிபோடுவது இரண்டுதான் இந்த மாதத்தில் சட்டசபையினுடைய வேலை சென்ற வருஷம் இந்த நிதி அறிக்கையைக் கொண்டுவரும்போது பழைய நிதி மந்திரி சுப்ரமணியம் அவர்கள் இருந்தார்கள். மொத்தமாகக் கடன் வாங்கி வைத்துவிட்டு அவர் போய்விட்டார். எல்லா வேலையும் சேர்த்து நம்முடைய அன்பான நிதி மந்திரி வந்திருக்கிறாரே அவர் தலையில் வந்துவிட்டது. அப்பொழுதே நான் சொன்னேன். வரி போடுவதற்கு பதில் கடன் வாங்குகிறார்கள். இரண்டும் செலவுதான். இதைப் போடும்போது பின்னால் வருகிறவர்களுக்கு ஏன் தொந்தரவு வைக்கிறார்கள்? பழைய மந்திரியே இதில் இப்போது வந்து மாட்டிக்கொண்டார். அவரும் பார்த்தார், எப்படி எப்படி எல்லாமோ பார்த்து எதில் போட்டால் எப்படியிருக்குமென்று பார்த்து நுழைப்பதுபோல் பஸ்ஸில் போட்டார். இது ஏழை எளியவர்களைத்தான் பாதிக்கும். என்னைப்போன்றவர்களை அல்ல. நான் காரில் போகிறேன். ஏழைகளின் தலையில்தான் இது போகப்போகிறது. பஸ் வருமானத்தில் வாங்கமுடியாது. வரிபோடுவது இருக்கிறதே, வருமானத்திலிருந்து அதை வாங்கும் சக்தி இருக்கவேண்டும். இதை பஸ் சொந்தக்காரர்கள் கொடுக்கப்போவதில்லை. அவர்கள் எல்லாம் புரோக்கர்களாக இருக்கிறார்கள். இந்தவரி பணக்காரனுக்குப் போகாது, "நாங்கள் போடுகிற வரி ஏழைகளுக்கு அல்ல, பணக்காரர்களுக்குத்தான்" என்று மந்திரிகள் பேசுகிறார்கள் வெளியே, ஆனால் வியாபாரிகள் எல்லாம் கவர்ன்மெண்டுக்கு புரோக்கராக இருந்து வரி வாங்கி கொடுக்கிறவர்கள். அதற்குத்தான் எங்களை—வியாபாரிகளை வைத்திருக்கிறார்கள். ஒரு ரூபாய் அரசாங்கத்திற்குக் கொடுக்கவேண்டுமென்றால், ஒன்னே கால் ரூபாய் மக்களிடமிருந்து வாங்கி கால் ரூபாயை எடுத்துக்கொண்டுதான் மீதியைக் கொடுப்பார்கள். அது வியாபாரிகளுக்கு லாபம். பஸ்காரர்களுக்கு இப்போதே ரொம்ப லாபம் வருகிறது. நூற்றுக்கு ஆயிரம் பர்செண்ட் என்றுகூட சொல்லலாம். அவ்வளவு வருகிறது. அது எப்படி வருகிறது என்று சொல்லட்டுமா? சாமான்கள் வாங்காமலேயே, வாங்கிய மாதிரி ரசீதுகளை வருமான வரி அதிகாரிகளுக்குக் காண்பிக்கிறார்கள். ஆக, பஸ் போக்கு வரத்து வண்டிகளுக்கு வரி அதிகரித்திருப்பது, பஸ் முதலாளிகளைப் பாதிக்கப் போவதில்லை. இதெல்லாம் ஏழை மக்களுக்குத்தான் போய்ச்சேரும்.

[திரு. எ. கே. தங்கவேல் முதலியார்] [2nd July 1962

4-50 p.m. அடுத்தபடியாக, மின்சாரம் இருக்கிறதே, அதில் கைவைத்தால் மனிதனைச் சாகடித்து விடும். அதைப்போல இப்போது விதித்திருக்கிற மின்சார வரி மின்சாரம் வைத்துக் கொண்டாலே விவசாயிகளைச் சாக அடித்துவிடும். இங்கே நாம் ஆடம்பரமாக யாரோ கட்டி வைத்திருக்கிற இடத்தில் இருந்து விட்டுப் போகிறோம். இந்த வரி விதிப்பின் கஷ்டம் நமக்குத் தெரியாது. குறிப்பாக புஞ்செய் நிலத்தில் நஞ்சைச் சாகுபடி செய்கிற விவசாயிகளைத்தான் இந்த மின்சார உபயோகத்தின் மீது போடப்படும் வரி விதிப்பு பாதிக்கும். ஒரு நாள் மழை பெய்ய வில்லை என்றாலும், அந்த விவசாயி மின்சாரம் எடுத்துக் கொள்ளுவான். ஒரு வருடத்தில் 365 நாட்களில் 300 நாள் மின்சாரம் எடுத்துக் கொள்ளுவான். ஆகையால் இந்த வரிகளை எல்லாம் போடும் போது அவர்களைப் பாதிக்காமல் இருக்க வேண்டும். விவசாயச் செலவு சாதாரணமாகவே அதிகமாக ஆகிறது. விவசாயக் கூலிகளுக்கு நாள் ஒன்றுக்கு இரண்டு ரூபாய் கூலி கொடுத்து சாப்பாடு போட வேண்டியிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்படுத்தப்பட்ட பிறகு, விவசாயத்துக்குக் கூலிகள் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. அபிவிருத்தி வேலைகள் என்று இந்த யூனியன்களில் வேலைக்காகக் கூலிகள் சென்று விடுகிறார்கள். மண்ணை எடுத்துக் கொட்டிவிட்டு, நாளொன்றுக்கு ரூபாய் மூன்று கூலி வாங்குகிறார்கள். அந்த வேலை அவர்களுக்கு லாபமாக இருக்கிறது. அதனால் விவசாயத்துக்குக் கூலிகள் கிடைப்பதில்லை. அறுப்பு அறுக்கிறபோது வேண்டுமானால் சாப்பாடு போட்டு, கூலி கொடுக்கலாம். ஆனால் விதை விதைக்கிற வேலைக்கும் சாப்பாடு போட்டு, கூலி கொடுக்க வேண்டு மென்று கேட்கிறார்கள். விவசாயம் செய்கிறவர்கள் அதிகம் பேர் இந்த சபையில் இருக்கிறோம். இதையெல்லாம் நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். கட்சிக்கட்டுப்பாட்டின் காரணமாக எந்த வரியைப் போட்டாலும் தலையாட்டினால் போதாது. தாராளமாக மனம் விட்டுப் பேச வேண்டும்; பேசினால்தான் விவகாரம் தீரும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, ஸ்டாம்பு கட்டண விகிதத்தை உயர்த்தியிருப்பது. அந்த வரி நன்றாகப் போடலாம். ஆனால் அதனால் லாபம் வராது. ஏனென்றால், கட்டணம் அதிகரிக்க அதிகரிக்க சொத்தின் மதிப்பைக் குறைத்து எழுதுகிறார்கள். பழமையாக வந்த மூன்று ரூபாய் கட்டணமும் கூட போய் விடுமோ என்று அஞ்சுகிறேன்.

நஞ்சைத் தீர்வையைப் பற்றி நான் சொல்ல விரும்புவது, முன்பு இருந்த தீர்வையில் செஸ் வரி என்று ஜில்லா போர்டு, தாலுக்கா போர்டு இருக்கிறபோது 7½ அணா ஆக்கி விட்டார்கள். இந்த பஞ்சாயத்து யூனியன்கள் வந்த பிற்பாடு 30 ந.பை., 35 ந.பை. கூட போட்டிருக்கிறார்கள். இந்த 5 அணா இப்போது போடப்போகிற வரி சேர்ந்தால் ஒரு ரூபாயாகும். புஞ்சைக்கு

2nd July 1962] [திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார்]

100 சத விகிதம் தண்ணீர் தீர்வை என்று இப்போது போட்டிருக்கிறார்கள் இதெல்லாம் சேர்ந்து என்னவாகுமென்றால், விவசாயப் பொருள்களின் அகவிலை உயரும். இந்த மாதிரி வரிகளைப் போட்டால், அகவிலையைக் குறைக்க முடியாது. விவசாயிகள் வாழ்க்கைத் தரமும் உயராது. விவசாயத்தில் வருகிற வருமானம் வருஷம் 360 நாட்களுக்கு வாழ்க்கைச் செலவுக்குப் போதவில்லை. அகவிலை உயர்வால், கிராமத்தில் விவசாயிகள் பூரா வீட்டிற்கும் ஓலை வேய முடியாமல் பாதியில் நிறுத்த வேண்டி வருகிறது. சென்ற வருஷம் பனை ஓலை 100-க்கு 1-8-0 விலை; இப்போது 5-0-0, 5-4-0 ஆக இருக்கிறது. இருக்கிற தொந்திரவு எல்லாம் நடுத்தர ஆட்களுக்குத்தான். அவன் கூலி வேலைக்கும் போக முடியாது. வாழ்க்கைக்கு வேறு வழியில்லாமல் தூக்கு போட்டுக்கொள்ள வேண்டிய நிலைமை அவனுக்கு ஏற்படுகிறது. எவனும் கடன் வேறு கொடுக்கமாட்டேன் என்கிறான். கொடுத்தால் எப்படித் திரும்பி வரும்? ஆகவே என்னைப் போன்றவர்கள் முழித்துக் கொண்டு விட்டார்கள், கடன் கொடுப்பதில்லை என்று. ஆக, ரொம்ப சங்கடம் ஜனங்களுக்கு. விவசாயிகளுக்கு இந்த வரி போட்டிருப்பது அவர்களை மிகவும் பாதிக்கும். கட்டாயம் உணவுப் பொருள்களின் விலை அதிகமாகும். உணவுப் பொருள்கள் உற்பத்தியை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்று அரசாங்கம் சொல்லுகிறது. பழைய நிதி மந்திரி அவர்கள் கொடுத்திருக்கின்ற அறிக்கையில் உணவுப்பொருள் உற்பத்தி 1951-ல் 19 லட்சத்து 50 ஆயிரம் டன் என்றும், 1961-ல் 35 லட்சத்து 50 ஆயிரம் என்றும் குறிப்பிட்டிருக்கிறது. இது அரிசி உற்பத்தியைப் பொறுத்த புள்ளி விவரம். 16 லட்சம் டன் நெல் உற்பத்தி அதிகரித்திருக்கிறது. மற்ற புஞ்சை தான்யங்கள் உற்பத்தி வேறு பெருகி இருக்கிறது. உற்பத்தி அதிகமாகும் அளவுக்கு விலையும் கூடவே ஏறியிருக்கிறது. உற்பத்தி அதிகமானால் விலை குறையும், சுபிட்சம் ஏற்படும் என்று சொல்லுகிறார்களே, ஏன் ஏற்படவில்லை? உற்பத்தி அதிகமானாலும், கூடவே உற்பத்திச் செலவு ஏறிக் கொண்டிருக்கிறது. கொள்முதலுக்கும், விற்று முதலுக்கும் அதிக வித்தியாசம் இல்லாமல், லாபமும் குறைந்து, சில வேளைகளில் லாபமே இல்லாமல் போய் விடுகிறது. பயிரைப் பூச்சி அடித்துவிட்டால், அடியோடு விவசாயிக்கு நஷ்டம்தான். நகரத்தில் வீடுகளை வாங்கி வைத்துக்கொண்டு வாடகைக்கு விட்டு, பணத்தை டிபாசிட்டில் கட்டி, வட்டி வாங்கிச் சாப்பிடுவது மாதிரி இல்லை விவசாயத் தொழில். அதிக மழை பெய்தாலும் அல்லது காய்ந்தாலும், விவசாயத் தொழில் போயிற்று. இந்த லட்சணத்தில் இருக்கிற விவசாயிகளைப் பாதிக்கும்படியாக, மின்சார உபயோகத்தின் மீது வரி விதிப்ப தானது, அவர்களையும் கெடுப்பதோடு, நாட்டையும் கெடுக்கிறோம் என்று தான் ஆகும்.

அடுத்து, பந்தய வரியை அதிகரித்து இருப்பது வரவேற்கத் தக்கது. இன்னும்கூட அந்த வரியை அதிகப்படுத்தலாம். வழிப்பறிக்கொள்ளை மாதிரி அந்தத் தொழில். ஆனால் அமைச்சர வர்கள் ஓரளவு அதிகரித்ததோடு விட்டு விட்டிருக்கிறார்.

[திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார்] [2nd July 1962

அடுத்தபடியாக, கரும்பின் மீது உள்ள செஸ் வரியை அதிகரித்திருப்பது, கரும்பு உற்பத்தியைப் பாதிக்கும். சென்ற வருடம் சர்க்கரை ஆலைகள் டன்னுக்கு ரூ. 43 என்று கரும்புக்கு விலை போட்டார்கள். நாங்கள் கரும்பை எடுத்துக்கொண்டு போய் ஆலைகளில் சேர்ப்பதற்காக அதற்கும் சார்ஜ் கொடுத்தார்கள். இப்போது அந்தச் செலவைக் கொடுக்கமாட்டோம் என்று சொல்லி விட்டார்கள். அத்தோடு கரும்பு விலை டன் ஒன்றுக்கு ரூபாய் 33 ஆகிவிட்டது. மடிப்பு கரும்புகளிலும் அதிகம் லாபமில்லை. இந்த நிலைமையில் கரும்பின் மீது டன்னிற்கு 2 ரூபாயாக இருந்த செஸ் வரியை, 5 ரூபாயாக அதிகரித்திருப்பது, கரும்பின் விலையை இன்னும் கீழே விழ்த்துவதோடு, உற்பத்தியையும் பாதிக்கும்.

இந்த மாதிரி ஐந்தாண்டுத் திட்டங்களைப் போட்டுக் கொண்டு, வரிகளை ஏற்றிக் கொண்டே போனால், அது எங்கே கொண்டு போய் நம்மை நிறுத்துமோ என்று எனக்கு புரியவில்லை. நீங்கள் வாழா விட்டாலும், உங்கள் பிள்ளைகள் நன்கு வாழ வழி ஏற்படும் என்று நமக்கு ஆசை காட்டுகிறார்கள். நமக்கே தெரிகிறதே நாம் போன பிற்பாடு அவர்களுக்கு எங்கே இருந்து நல் வாழ்வு வரப் போகிறது என்று எனக்குத் தெரியவில்லை.

ஐந்தாண்டு திட்டம் என்று போட்டு, வருடா வருடம் நிர்வாகச் செலவு அதிகமாகிக்கொண்டிருக்கிறது, வருடா வருடம் உத்தியோகஸ்தர்களின் எண்ணிக்கையை அதிகமாக்கிக் கொண்டிருக்கிறோம். **Development Scheme** என்று வைத்திருக்கிறீர்களே, அவைகளுக்கு என்ன அதிகமான நிர்வாகச் செலவு ஆகிறது என்று எண்ணிப் பாருங்கள். மூன்று பஞ்சாயத்து யூனியன்களுக்கு சேர்த்து ஒரு தாசில்தார் இருக்கிறார். தாசில்தாருக்கு ஜீப்இல்லை, ஆனால் இந்த **Block Development** ஆபிசர்களுக்கு ஜீப் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை வைத்துக் கொண்டு அவர்கள் காப்பி ஓட்டல்களுக்குப் போய் வருகிறார்கள், அவர்களுக்கு பெட்ரோல் எங்கேயிருந்து வருகிறது என்று தெரியவில்லை. இந்த ஆபீசர்கள் ஒரு வேலைக்குப் போவது என்றால், கூட டிரைவர், குமஸ்தா ஆக மூன்று பேர் போகிறார்கள். ஆக மூன்று பேருக்கும் சர்க்கார் பிரயாணப்படி கொடுக்க வேண்டும். இப்படித் தான் ஒவ்வொரு இனத்திலும் அரசாங்கத்தில் ஊதாரிச் செலவு ஆகின்றது. நீர் இறைத்தால் பயிருக்கு போகாமல் வழியில் இருக்கும் புல்லுக்குப் போவது போல், குறித்த வேலைக்கு பணம் உபயோகப்படாமல், நிர்வாகச் செலவில் பணம் அதிகமாக வீணாகிறது. ஆகவே நிர்வாகச் செலவைச், சிக்கனப் படுத்த வேண்டும். நிர்வாகத்தில் ஊழல், லஞ்சம் அதிகமாக இருக்கிறது. ஏழை மாணவர்களுக்கு சாப்பாடு போடுவதற்கு கொடுக்கும் பணத்தில் மிச்சப் படுத்துவது பால் பவுடரை குழந்தைகளுக்கு கொடுத்தால், அது காப்பி ஓட்டல்களுக்குப் போய்ச் சேருவதும், இந்த மாதிரி ஏன் நடை பெறுகிறது என்றால், கட்சிக்கு வேண்டியவர்களிடம் அந்த வேலைகளைக் கொடுப்பதால் நம்மை யார் கேட்க முடியும், கேட்டால் நமக்கு வேண்டிய மந்திரி இருக்கிறார் பார்த்துக் கொள்ளுவோம் என்ற தைரியத்தால் தான். இந்த மாதிரி அரசியலில் சேர்ந்தால், பணம் சுருட்டலாம்

2nd July 1962] [திரு. எ. கே. தங்கவேல் முதலியார்]

என்று தெரிந்து விட்டது. ஜனங்களிடம் அன்பு இல்லை, இரக்க மில்லை. பொதுக் காரியங்களைச் செய்கிற போது இதெல்லாம் இல்லாது போவதால், ஊழல் ஏற்படுகிறது. பர்வ பக்குவம் இல்லாதவனுக்கு பிரம்மஞானம் பயில்வித்தால் குருவுக்குப் பாவம் என்று ஞான்வாசிட்டத்தில் சொல்லுவதைக் கேட்டுச் சொல்லு கிறேன். நான் தான் இரண்டாவது பாரத்தில் பரீட்சைக்கே போகவில்லையே. இந்த மாதிரிச் சொல்லுகிறபோது, எது முக்கியமோ அதை மனதில் வைத்துக் கொள்ளுவேன். அது ஞாபகத்துக்கு வந்துவிட்டது சொன்னேன். நம் ஜனநாயகம் வெறும் தேர்தலுக்கும் நிர்வாகக் காரியங்களுக்கும் கட்சிக் காரியங்களுக்கும் தான் பயன் படுகிறது. மக்களுடைய சுபாவ மும் 40 வருடத்துக்கு முன்னல் இந்த மாதிரி இல்லை. சேவை மனப்பான்மை இல்லாமல் சேமிக்கிற மனப்பான்மை தான் இருக் கிறது. இவைகளை எல்லாம் மாற்றியமைக்க வேண்டும். இல்லா விட்டால் அபவாதம் ஏற்படும்.

அதுவும் இப்போ மந்திரிகளிடம் போய் "ரொம்ப கஷ்டமா இருக்குதே விலைவாசிகள் குறைய எதாவது உதவி பண்ணுங்க" என்று சொன்னல் "சரிதான் போய்யா, அரச மரத்தை சுத்தி வந்து அடி வயிற்றை தொட்டுப் பார்த்தா, பிள்ளை வருமா?" என்று கேட்கிறாங்க. அப்படி வராது. நாங்க எல்லாம் பேரன் பேத்தி எடுத்தவங்க. எங்களுக்குத் தெரியும் எப்போ வரும் என்று. 16 வருஷமாக நீங்கள் ஆளுகிறீர்கள். 1946-லிருந்து 16 வருஷ மாகப் பிள்ளை பிறக்குது! வயிறு பெரிசாகிப் போச்சு. இந்த சர்க்கார் வந்து 16 வருஷ கர்ப்பம். இப்போது பார்க்கும் போதோ மகோதரமாக இருக்குதே தவிர, பிள்ளை இல்லை. ஒரு திட்டம் போட்டு காரியம் பண்ணிஞல் எப்படி இருக்கணும் என்ருல், மழை பெய்தால் எப்படி காடு, காம்பு மேடு, பள்ளம் எல்லாவற்றுக்கும் பலன் ஏற்படுகிறதோ, அப்படி இருக்கனும் சர்க்கார் போடும் திட்டம் மேலே இருக்கிறவர்கள், கீழே இருக் கிறவர்கள் எல்லாருக்கும் திட்டத்தின் பலன் கிடைக்க வேண்டும். இப்போது அந்மாதிரி இல்லை. பணக்காரர்களுக்குத்தான் பலன் இருக்கிறது. நடுத்தர ஆட்களுக்கு இல்லை. ஆயிரத்தில் 3 பேர் 4 பேர்கள் நன்ருக இருந்தால் போதுமா? 5-00 p.m.

எங்கெங்கோ குடகில் மழை பெய்தால் பள்ளத்தாக்கில் ஓடி வந்து, காவேரியில் வந்து பாய்ந்து பள்ளத்தில் மேட்டூர் காவேரியில் வந்து பாய்ந்து பள்ளத்தில் இருக்கும் நிலங்கள் பய னடைந்தாலும், விட்டையும் அடிச்சிக்கிட்டு போகிறது பாருங் கள் அந்த மாதிரி இருக்கிறது இது. இப்போது மட்டும் திட்டத் தினல் எழை எளியவர்கள் கீழ் மட்டத்தில் இருப்பவர்களுக்கு லாபம் இல்லை. எப்படிச் செய்தால் விவசாயம் நன்ருக இருக்கும் என்று என்னுடைய அபிப்ராயத்தைச் சொல்லலாம் என்றிருக் கிறேன்.

விவசாயத்தை அபிவிருத்தி செய்வது எப்படி என்ருல் என் னுடைய அபிப்பிராயம் அதைக் கொஞ்சம் மனம் வைத்துச் செய் தால் நன்ருக இருக்கும். உரம் தயார் செய்கிருர்கள், பாருங்கள் நான் அனுபவப்பட்டுச் சொல்கிறேன், மீன் உரத்தைப் போல்

